# இறைவன் தந்த இயற்கை

[சிறுவர் பாடல்கள்]



ஆசிரியர் :

**புலவர் பொ முனியப்பன்**

*தமிழாசிரியர், காந்தி கல்வி நிலையம் உயர்நிலைப்பள்ளி,*

*கூடகளூர்.*



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
1/140, பிரகாசம் சாலை, சென்னை-1.
1975

பொன்னம்பலம் முனியப்பன்


THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY, LIMITED.

கிளைகள் :

திருநெல்வேலி-6 மதுரை-1 கோயமுத்தூர்-1
கும்பகோணம் திருச்சிராப்பள்ளி-2

கழக வெளியீடு : கஉஎக

முதற் பதிப்பு : அக்டோபர் 1975




IRAIVAN THANTHA EYARKKAI
(SIRUVAR PADALGAL)


திருவரங்கனார் அச்சகம், சென்னை - 600 013. (1/6)

# பதிப்புரை

இளைஞர்க்கேற்ற கருத்துள்ள பாடல்கள் வளர்ந்து பெருகிவரும் இக் காலத்துக் கேற்றபடி புலவர் பொ. முனியப்பன் அவர்கள் பல தலைப்புகளில் பாடல் களைப் புனைந்து அளித்துள்ளார்.

'இறைவன் தந்த இயற்கை' என்னும் இந்நூலுள் ஞாலம் என்பது முதலாக இயற்கை என்பது ஈருகப் பதினொரு தலைப்புகள் அமைந்துள்ளன.

சிறுவர் இளமைக்காலத்திலேயே சிறந்த எளிய பாடல்களைப் படித்தும் பாடியும் மகிழ்வார்களானல், நாளடைவில் அவர்கள் உள்ளம் வளர்ந்து தமிழ்ச்சுவை காணும் இயல்பில் விளங்கும். "செந்தமிழும் நாப் பழக்கம்" என்றதற் கேற்றபடி அவர்கள் இளமையில் படிக்கும் பாடல்கள் அவர்கள் நாவில் செழுந்தமிழை வளர்க்கும்.

இப் பாடல்களுள் அருஞ்சொற்கள் ஒரு சில உள்ளன. நாளடைவில் சிறுவர்கள் பொருள் தெரிந்து கொண்டு அறிவு வளர்ச்சி பெறுவதற்கு அவை பயன் படும்.

இத்தகைய இனிய பாடல்களை எழுதியுதவிய ஆசிரியர் அவர்களுக்குக் கழகத்தின் நன்றியுரியது.

பள்ளித்தலைவர்களும் நூலகத் தலைவர்களும் இந் நூலினை வாங்கி மாணவர்களுக்குப் பயன்படச் செய்ய வேண்டுகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை



---

# இறைவன் தந்த இயற்கை

## 1. ஞாலம்

காலங் கணிப்பதும் ஞாலம்
　　காற்றை உடையதும் ஞாலம்
ஓலம் உடையதும் ஞாலம்
　　ஒழுங்காய்ச் சுழல்வதும் ஞாலம்.

ஆலல் மிக்கதும் ஞாலம்
　　அழகு மிக்கதும் ஞாலம்
கூலந் தருவதும் ஞாலம்
　　கூட்ட முடையதும் ஞாலம்.

புலத்தை அளிப்பதும் ஞாலம்
　　புன்மை யொழிப்பதும் ஞாலம்
குலத்தைக் காப்பதும் ஞாலம்
　　குறையைக் களைவதும் ஞாலம்.

மடமட வென்றே நீரை
 மழையாய்ப் பொழிந்து, என்றும்
உடலையும் உயிரையும் நன்ருய்
 ஊட்டி வளர்ப்பது மழையே.

உழைத்து மக்கள் உயர
 உடலை வளர்த்துக் காக்க
விளைத்துப் பயிரை ஆக்க
 வீழுந் துளியே துணையாம்.

பிழைப்பினைத் தந்தே மாந்தர்
 பேறுகள் பலபெறச் செய்தே
களைப்பினை நீக்கியே யென்றும்
 கடமை வளர்ப்பது மழையே.

எண்ணிட இயலாப் பயிர்கள்
 எல்லாம் எழுந்து வளர்ந்து
திண்மையும் வளமையும் பெற்றுத்
 திகழ்ந்திடச் செய்வது மழையே.

உண்ணும் நீராய் விளங்கி
உணவை ஆக்கவும் உதவி
உண்மை வாழ்வைக் காக்கும்
ஒப்பிலா மழையே வாழ்க.

———

எழிலினை - வளரும் அழகினை, தீக்கொடி - மின்னல்.

## 3. ஞாயிறு

ஞாலத்தைப் பெற்றதும் ஞாயிறு
நலம்பல தருவதும் ஞாயிறு
காலத்தில் எழுவதும் ஞாயிறு
கருமுகில் தருவதும் ஞாயிறு.

கூலத்தை விளைப்பதும் ஞாயிறு
குளிரைக் குறைப்பதும் ஞாயிறு
கோலத்தைக் கொடுப்பதும் ஞாயிறு
குறைவிலா ஆற்றலும் ஞாயிறு.

(சூரியன்)

சுள்ளென்று எரித்திடும் சூரியன்
சுடராய் விளங்கிடும் சூரியன்
வெள்ளத்தை விழுங்கிடும் சூரியன்
வேண்டிய ஒளிதரும் சூரியன்.

## ஞாயிறு

கள்ளத்தைக் காட்டிடும் சூரியன்
கடமை தவறிடாச் சூரியன்
உள்ளத்தை ஊக்கிடும் சூரியன்
உழைப்புக்கு உதவிடும் சூரியன்.

---

ஞாயிறு - சூரியன். ஞாலம் - உலகம். கூலம் - (தானியம்) தவசம். கோலம் - அழகு

## 4. காற்று

கண்ணுக்குத் தெரியாது காற்று
கையினில் சிக்காது காற்று
மண்ணைப் புரட்டிடும் காற்று
மரத்தினை வீழ்த்திடுங் காற்று

திண்மை அற்றது காற்று
திறனில் மிக்கது காற்று
உண்மையாய் உதவுங் காற்று
உயிரினைக் காக்குங் காற்று.

குடக்குத் திசையின் காற்றே
கோடையாய் வீசுங் காற்று
வடக்குத் திசையின் காற்றே
வாடையாய் வீசுங் காற்று.

கிழக்குத் திசையின் காற்றே
கொண்டலாய் வீசுங் காற்று
தெற்குத் திசையின் காற்றே
தென்றலாய் வீசுங் காற்று.

உழன்று மக்கள் ஓட
உரப்பாய் வீசுங் காற்றே
வழக்கில் இல்லாக் காற்று
வன்புயல் என்னும் காற்று.

சுழன்று வீசுங் காற்றைச்
சூறு வளியெனச் சொல்வர்
அழன்று வீசுங் காற்றை
அனல்காற் றென்பர் ஆன்றோர்.

பழகு தமிழைப் பேசப்
பலவகை ஒலிகளை ஆக்க
அழகாய் உதவும் ஒன்றே
அமைதியாய் உள்ள காற்று.

குழலின் வழியே சென்று
குயிலிசை கொடுப்பதுங் காற்றே
உலகம் முழுதும் ஓசை
உடனே தருவதும் காற்றே.

---

குடக்கு - மேற்கு. உழன்று - துன்பமுற்று. வழக்கில் - வழக்கத்தில், வழக்கமாக.

## 5. வானம்

விண் என்று நிற்பது வானம்
விளங்கித் தோன்றுவது வானம்
கண்ணுள் அடங்காது வானம்
காட்சியில் சிறந்தது வானம்.

வெண்ணிலா விளங்கும் வானம்
விரிகதிர் பரப்பும் வானம்
விண்மீன் என்னும் கண்ணால்
விழித்தே இமைக்கும் வானம்.

பலநிறங் காட்டும் வானம்
பறவைக் கிடந்தரும் வானம்
அளவிட இயலா வானம்
அமைதியை வழங்கும் வானம்.

நிலந் தனில் கவிழ்ந்து கொண்டு
நீளுறக்கம் கொள்ளும் வானம்
கலந் தனில் செல்வோர் காணும்
காட்சியோ என்றும் வானம்.

---

விசிகதிர் - சூரியன். கலம் - கப்பல்.

## 6. திங்கள்

எங்கள் அன்புத் திங்கள்
இன்பந் தந்திடும் திங்கள்
பொங்கும் ஒளியைப் பொழிந்து
பொன்னுய் மின்னிடுந் திங்கள்.

கங்குல் என்னும் இருளைக்
கடிதில் விரட்டும் திங்கள்
எங்கும் பொழியும் பால்போல்
இனிமை யளித்திடும் திங்கள்.

(நிலவு)

நில்லாது இயங்கும் நிலவு
நிலைத்திணை இல்லா நிலவு
இல்லம் இல்லா நிலவு
இரவில் ஒளிதரும் நிலவு.

ஓல்லும் வகையெலாம் உதவும்
உயிர்க்காற் றில்லா நிலவு
எல்லாம் கொண்டு சென்றே
இருந்து வாழ்வோம் நிலவில்.

---

கடிதில் - விரைவில். தெம்பு - ஊக்கம். நிலைத்திணை - தாவரம்.

# 7. விண்மீன்

விண்ணின் கண்ணாய் விளங்கி
விழிக்கும் ஒளியே விண்மீன்
பண்ணின் ஒலிபோல் சுவையைப்
பார்க்கும் போதே நல்கும்.

எண்ணத் தொலையாத் தொலைவில்
இருந்தே ஒளிதரும் இம்மீன்
திண்ணமாய் உதவும் நமக்குத்
திணரும் மனத்தைக் குவிக்க.

இப்பெரும் வானத்தில் தோன்றும்
எண்ணற்ற விண்மீன்களெல்லாம்
ஒப்பரும் ஞாயிற்றைப் போன்றே
ஒளியினை உமிழ்கின்ற தம்மா!

அப்பாலுக் கப்பாலஒப் பின்றி
அகன்று செல்லுமிவ் வானத்தில்
எப்போதும் இயங்கிடும் விண்மீன்
இயல்பினைச் சொல்லுவ தெளிதோ!

---

## 8. மலை

முகிலைத் தடுப்பதும் மலையே
முன்னோர் வாழ்ந்ததும் மலையே
அகிலைத் தருவதும் மலையே
ஆற்ற லுடையதும் மலையே.

நெகிழ்ச்சி அமையாத் திண்மை
நிறைவாய்க் கொண்டதும் மலையே
துகிலாய்ச் செடிகொடி மரத்தைத்
தொடர்ந்து அணிவதும் மலையே.

அருவிகள் வீழ்வதும் மலையில்
அழகு பொலிவதும் மலையில்
அரும்பொருள் விளைவதும் மலையில்
ஆற்றின் தோற்றமும் மலையில்.

திருவின் பெருக்கமும் மலையில்
தேனின் விளைவும் மலையில்
கருங்கல் இருப்பதும் மலையில்
கண்கொளாக் காட்சியும் மலையில்.

இயற்கையின் இருப்பிடம் மலையே
இமம்உறை இடமும் மலையே
உயக்கம் களைவதும் மலையே
ஊக்கந் தருவதும் மலையே.

கயங்கள் இருப்பதும் மலையே
கடத்தற் கரியதும் மலையே
குயவரி வாழ்வதும் மலையே
குறிஞ்சி என்பதும் மலையே.

உருவில் உயர்ந்ததும் மலையே
உயர்வில் சிறந்ததும் மலையே
பெருமைக் குரியதும் மலையே
பேணிக் காப்பதும் மலையே.

மருந்து தருவதும் மலையே
மஞ்சு சூழ்வதும் மலையே
விரும்பிச் செல்லுவர் மக்கள்
விருந்து நல்கும் மலைக்கே.

---

அகில் - மணப்பொருள். துகில் - ஆடை, துணி. இமம் - பனி. உயக்கம் - வருத்தம், துன்பம். கயம் - ஆழம், மடு, யானை. குயவரி - புலி. மஞ்சு - முகிற் கூட்டம்.

## 9. ஆறு

புனலைப் பெருக்கும் ஆறு
புதுமை காட்டும் ஆறு
தணலைப் போக்கும் ஆறு
தண்மை வழங்கும் ஆறு.

இன்னலைப் போக்கும் ஆறு
இன்பத்தை ஆக்கும் ஆறு
பன்னரும் பயிர்கள் தோன்றப்
பாங்காய் உதவும் ஆறு.

அழுக்கினை அகற்றும் ஆறு
அழகினை வழங்கும் ஆறு
வழுக்கிடும் பாறைகள் கொண்ட
வற்ருத பெரும்பேராறு.

இழுத்தே செல்லும் ஆற்றல்
இயற்கையாய்ப் பெற்ற ஆறு
ஒழுங்காய் நீரைத் தந்து
உயிரினைக் காக்கும் ஆறு.

கல்லுங் காடுங் கடந்தே
கடிதாய் ஓடி வந்தே
ஒல்லும் வகையெலாம் உதவி
ஒடுங்கும் கடலில் என்றும்.

அல்லும் பகலும் இயங்கும்
ஆற்றல் உடையது ஆறு
பொல்லா வெள்ளங் கொண்டே
எல்லாம் அழிக்கும் ஆறு.

விளைந்திடும் மாந்தர் எல்லாம்
வேளாண்மை புரியு மாறு
தழைத்திட வைக்கும் நீரைத்
தயவுடன் வழங்கும் ஆறு.

உழைத்திட ஊக்கும் ஆறு
உயர்ந்திடச் செய்யும் ஆறு
பிழைத்திடும் மாந்தர் எல்லாம்
பெரிதெனப் போற்றும் ஆறு.

---

புனல் - நீர். தணல் - வெப்பம். தண்மை - குளிர்ச்சி. இன்னல் - துன்பம். கடிதாய் - விரைவாய். ஒல்லும்வகை - இயன்ற வகை. விழைந்திடும் - விருப்பங் கொண்டிடும்.

## 10. கடல்

காலையில் எழுந்து வாராய்
கடலின் வனப்பைக் காணாய்
வேலையின் வேலையைப் பாராய்
வியந்து மகிழ்ந்து செல்வாய்.

மாலையில் கடலில் தோன்றும்
மனமகிழ் இன்பக் காற்று
ஆலைவாய்க் கரும்பின் நீர்போல்
அரும்பெருஞ் சுவையை நல்கும்.

இடத்தில் முக்கால் பகுதி
எடுத்துக் கொண்டதுங் கடலே
திடத்தால் எதிரியைத் தாக்கும்
'திமிங்கிலம்' பிறந்ததுங் கடலே.

உடலைப் பேணிக் காக்கும்
உப்பைத் தருவதும் கடலே
மடம்படு மீனினம் மாண்பாய்
மலிந்து கிடப்பதுங் கடலே.

முகிலின் பிறப்பும் கடலில்
முதலுயிர் பிறந்ததும் கடலில்
மகிழ்வுப் பொருளும் கடலில்
மகரம் வாழ்வதும் கடலில்

துகிரின் விளைவும் கடலில்
துறைபல இருப்பதும் கடலில்
முகிழ்க்கும் எண்ணெய் தன்னை
முயன்றால் கொடுப்பதும் கடலே.

அலைகளின் ஆர்ப்பும் கடலில்
ஆற்றின் அடக்கமும் கடலில்
விலைமதிப் பில்லா முத்து
வேலையில் விளைந்திடும் சொத்து.

கலைப்பொருள் உண்டு கடலில்
　　காண்போம் அதனைக் கடையில்
மலையை விழுங்கிய கடலின்
　　மாண்பைச் சொல்லுவ தரிதே!

---

வனப்பு - அழகு.　　வேலை - கடல்　　மகரம் - சுறுமீன்.
துகிர் - பவளம்.　　முகிழ்க்கும் - தோன்றும்.

## 11. இயற்கை

எழிலிற் சிறந்ததும் இயற்கை
இன்பந் தருவதும் இயற்கை
அழிவிலா ஆற்றலும் இயற்கை
அறிவை வளர்ப்பதும் இயற்கை.

பழியிலா உண்மையும் இயற்கை
படிப்பினை தருவதும் இயற்கை
கழிவிலாப் பொருளும் இயற்கை
கவின்பெரு வனப்பும் இயற்கை.

வானகை வயங்குவதும் இயற்கை
வளம்பல தருவதும் இயற்கை
மீனகை மிளிருவதும் இயற்கை
மேலாக மின்னுவதும் இயற்கை.

தானாகத் தோன்றியதும் இயற்கை
தேனாகத் தெவிட்டுவதும் இயற்கை
கானாக வளருவதும் இயற்கை
கண்ணுக்கு விருந்துதரும் இயற்கை.






---

எழில் - வளரும்அழகு. கவின்பெருவனப்பு - உள்ளத்தைக் கவரும் பேரழகு. கானாக - காடாக.

இறைவன் தந்த இயற்கை
என்றும் இன்பந் தருமே!

